### எலும்பைப் பெண்ணுருவாக்கல்

மயிலாப்பூர் சிவநேசச் செட்டியாரின் மகள் பூம்பாவை பாம்பு தீண்டி இறக்க, அவளது எலும்பைக் குடத்தில் சேமித்து வைத்தார் சிவநேசர். அதனை அறிந்த ஞானசம்பந்தர் திருக்கோயில் முன் அக்குடத்தை கொணர்வித்து “மட்டிட்ட புன்னை” என்ற பதிகம் பாடி உயிர்ப்பித்தார்.

### ஆண் பனையைக் குலையீன்றச் செய்தல்

திருவண்ணாமலை மாவட்டம் செய்யாறு நதிக்கரையில் அமைந்துள்ள வேதபுரீஸ்வரர் கோவிலில், சிவனடிகளார்கள் வைத்த பனை மரம் அனைத்தும் ஆண் பனைகளாக பூத்தன; இதைக் கேள்விப்பட்டு பதிகம் பாடி, அனைத்து ஆண் பனைகளையும் குலையீன்ற வைத்தார்.

### சோதியிற் கலத்தல்

பெற்றோர் விருப்பத்திற்கிணங்க, வேத நெறியில் நின்று, நம்பியாண்டார் நம்பிகள் திருமகளை மணமகளாக ஏற்று இந்த இல்லொழுக்கம் வந்து சூழ்ந்ததே இவள் தன்னோடும் "அந்தமில் சிவன் தாள் சேர்வன்" என்ற கருத்தமையக் கல்லூர்ப்பெருமணம் என்ற பதிகம் பாடினார். பெருமானது அசரீரியின்படி மனைவியோடும் உடன் வந்தாரோடும் வைகாசி மூல நன்னாளில் அங்கு தோன்றிய சோதியில் கலந்தார்.

### கோயில்

திருஞான சம்பந்த மூர்த்தி கோயில் ஒன்று தஞ்சை மாவட்டம், ஒரத்தநாடு வட்டத்தில் பேய்க்கரும்பன்கோட்டை என்ற கிராமத்தில் அமைந்துள்ளது. இக்கோயில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருக்கு சிறப்பாகக் கட்டப்பட்டது. இக்கோயிலில் சம்பந்தரே, மூலவராகவும் உற்சவ மூர்த்தியாகவும் உள்ளார். வருடா வருடம் வைகாசி மாதத்தில், இக்கோயிலில் இவ்வூர் மக்களால் சிறப்பாக திருவிழா நடத்தப்பட்டு, உற்சவ மூர்த்தி பல்லக்கில் அலங்கரிக்கப்பட்டு, வீதிகளில் உலாவருவார். மேலும், மார்கழி மாதத்தில் தினமும் அதிகாலையில் இவ்வூர் தேவார அடியார் குழுவால் தேவாரப் பாடல்களும், பதிகங்களும் பாடப்பெற்று, சம்பந்தருக்கு வழிபாடுகள் செய்யப்படுகின்றன.

## வரலாறு

**கி.பி. ஏழாம் நூற்றாண்டில், <u>சீர்காழி</u> என்னும் ஊரில் பிறந்தார். இவரது தந்தையார் சிவபாதவிருதயர். தாயார் பகவதி அம்மையார். இவர் மூன்று வயதுக் குழந்தையாக இருந்தபோது, தந்தையாருடன் கோயிலுக்குச் சென்றதாகவும், அங்கே குழந்தையைக் கரையில் அமரவிட்டுக் குளிக்கச் சென்ற தந்தையார், சிறிது நேரம் நீருள் மூழ்கியிருந்த சமயம், தந்தையைக் காணாத குழந்தை, அம்மை அப்பா என்று கூவி அழுததாகவும், அப்போது உமாதேவியார், சிவபெருமானுடன் இவர் முன் காட்சி கொடுத்து ஞானப்பாலூட்டியதாகவும் சொல்லப்படுகிறது. அது குறித்து கோயிலிலுள்ள இறைவனைச் சுட்டிக்காட்டி ‘*தோடுடைய செவியன்...*’ என்று தொடங்கும் தேவாரத்தைப் பாடினார் என்றும் சொல்லப்படுகிறது.**



# புகலிவேந்தரை அறிவோம்!

*‘வம்பறா வரிவண்டு மணநாற மலரும்*
*மதுமலர்நற் கொன்றையான் அடியலாற் பேணா*
*எம்பிரான் சம்பந்தன் அடியார்க்கும் அடியேன்!’*
*(பெரியபுராணம்)*



### ஞானப்பால் உண்டமை



ஞானசம்பந்தர் மூன்று வயது குழந்தையாக இருக்கும் போது அவரது தந்தையார் சம்பந்தரைத் தோணியப்பர் ஆலயக் குளக்கரையில் அமர வைத்து விட்டுக் குளிக்கச் சென்று அதிக நேரம் ஆகியும் வராததால் ஞானசம்பந்தர் அழுகிறார். அப்பொழுது சிவபெருமான் உமையம்மையுடன் காளையில் எழுந்தருளி அவருக்கு அமுதப்பாலைக் கொடுக்கிறார். பின்பு, ஞானச்சம்பந்தர் தம் தந்தையார் கேள்விகளுக்குப் பதிலாகத் "தோடுடைய செவியன்" எனும் தொடங்கும் முதல் பதிகத்தைப் பாடுகிறார்.

### பொற்றாளம் பெறுதல்

உமையம்மையின் ஞானப்பால் உண்ட திருஞானச்சம்பந்தர் திருக்கோலக்கா தளத்திற்குச் சென்று கைகளில் தாளமிட்டு "மடையின் வாளை பாய" எனும் பதிகப் பாடலைப் பாடுகிறார். தனது கை சிவக்கச் சிவக்கப் பாடிய பாலகனைப் பார்த்த சிவபெருமான் அகமகிழ்ந்து அவருக்குப் பொற்றாளம் அருளினார்.

### முத்துச் சின்னங்கள் பெறல்

திருஞானசம்பந்தர், தில்லை முதலிய பல தலங்களையும் தரிசித்து நடுநாட்டில் உள்ள திருநெல்வாயிலரத்துரை சார்ந்தார். களைப்பினால் மாறன்பாடியில் அமர்ந்து அன்றிரவு நித்திரை செய்தார். அரத்துறை பெருமான் சிவிகை, முத்துச் சிவிகை மற்றும் முத்துக் குடை போன்ற முத்துச் சின்னங்களை அருளினார். அவற்றை இறையருளெனப் பெற்ற ஞானசம்பந்தர், எந்தை ஈசன் எம்பெருமான் என்ற திருப்பதிகம் பாடிப் பரவினார்.



### உபநயனம்

சிவபாத இருதயர் 'உபநயனம்' எனப்படும் பூணூல் அணிவிக்கும் சடங்கினைச் சம்பந்தருக்கு செய்தார். அங்கு வந்த அந்தணர்கள் வேதங்களின் பல பகுதிகளையும் அவற்றின் பொருளோடு சம்பந்தர் ஓதக் கேட்ட வேதங்களில் தங்கட்கிருந்த ஐயங்களை ஞானசம்பந்தரிடம் கேட்டுத் தெளிவு பெற்றனர். ஞானசம்பந்தர் அவர்களை நோக்கி வேதம் நான்கிலும் மெய்ப் பொருளாய் விளங்கும் திருவைந்தெழுத்தின் சிறப்பை, 'துஞ்சலும் துஞ்சல்' என்று தொடங்கிப்பாடி அனைவருக்கும் உணர்த்தி அருளினார்.

### முத்துப் பந்தல் பெறல்

திருஞானசம்பந்தர், திருச்செங்குன்றூரிலிருந்து புறப்பட்டுப் பாண்டிக் கொடுமுடி, வெஞ்சமாக் கூடல், கருவூர் ஆனிலை முதலிய தலங்களைப் பணிந்து சோழ நாடு மீண்டு திருச்சிராப்பள்ளி முதலிய காவிரித் தென்கரைத் தலங்களை வணங்கிக் கொண்டு திருவலஞ்சுழி வந்தடை ந்தார். அப்போது இளவேனிற் பருவம் தொடங்கியது. திருவலஞ்சுழி இறைவனை வணங்கிப் பழையாறை மேற்றளியையும் திருச்சத்தி முற்றத்தையும் பணிந்து நண்பகற் போதில் பட்டீச்சுரம் வந்தடைந்தார். சிவ பூதங்கள் வானத்தில் மறைந்து நின்று பட்டீசுரர் அளித்த முத்துப் பந்தரை ஏந்தியவாறு இது சிவபெருமான் அளித்தது எனக் கூறி ஞானசம்பந்தரின் சிவிகையின் மேல் ஏந்தி நிழல் செய்தன.

### படிக்காசு பெறுதல்

அப்பரும் ஞானசம்பந்தரும் திருவீழிமிழலை என்ற தலத்தில் தங்கியிருந்தனர். அப்போது அங்கே பஞ்சம் ஏற்படவே, அடியார்களின் பசியைப் போக்கிட இருவருக்கும் ஒரு காசு அன்றாடம் பலிபீடத்தில் இருக்குமாறு இறைவன் அருள் புரிகிறார். அப்படிக்காசினைப் பெற்றும் சம்பந்தரின் அடியவர்களுக்கு உணவு குறைவாக உள்ளவே உரியவர்களிடம் சம்பந்தர் காரணம் கேட்க, அக்காசு தகுதி குறைந்து உள்ளதால் உணவு வாங்க இயலவில்லை என்கின்றனர். அதுகேட்டு இறைவனிடம் குறையில்லாக் காசு நல்குமாறு வேண்டுகிறார். இறைவன் மாசற்ற காசை நல்குகிறார்.

### திருமறைக்காட்டில் அற்புதம்

திருவீழிமிழலையிலிருந்து புறப்பட்டுத் பல தலங்களை வணங்கிக்கொண்டு திருமறைக்காட்டை அடைந்தனர். ஆலயத்தை வலம் வந்து வாயிலை அணுகினார்கள். ஞானசம்பந்தர் உரிய வாயில் வழியே சென்று வழிபட வேண்டுமெனத் திருவுளத்தெண்ணி அப்பரை வேண்டினார். அப்பர் 'பண்ணினேர் மொழியாள்' எனத் தொடங்கித் திருப்பதிகம் பாட அப்பதிகப் பொருட்சுவையில் ஈடுபட்ட இறைவன் பதிகத்தின் நிறைவில் திருக்கதவுகள் திறக்குமாறு செய்தருளினார். இக்கதவுகள் இனி திறக்கவும் அடைக்கவும் உரியனவாக இருத்தல் வேண்டுமென எண்ணி ஞான சம்பந்தரை நோக்கி இப்போது தாங்கள் திருக்கதவுகள் அடைக்கப் பாட வேண்டுமென வேண்டினார். ஞானசம்பந்தர் 'சதுரம் மறை' எனத் தொடங்கித் திருப்பதிகம் பாடினார். முதற்பாடலிலேயே கதவு அடைத்துக் கொண்டது. ஏனைய பாடல்களையும் பாடிப் போற்றினார் ஞானசம்பந்தர். பின்னர் இருவரும் சென்று தத்தம் திருமடங்களில் இனிதுறைந்தனர்.

### பாண்டி நாட்டில் சைவம்

பாண்டி நாட்டில் நெடுமாற பாண்டியன் சமண சமயம் சார்ந்து இருந்தமையை மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் என்ற இருவர் வாயிலாகத் தெரிந்து மதுரைக்குப் புறப்பட்டார். நாளும் கோளும் நலமில்லாதிருந்தும் உமையொருபாகன் உள்ளத்து விருப்பத்தால் "அவை நல்ல நல்ல" என "கோளறுபதிகம்" பாடி, ஏகினார். பாண்டியன் வெப்புநோயை "திருநீற்றுப் பதிகம்" பாடி அகற்றினார். அனல் வாதத்தை பச்சை பதிகம் பாடியும், புனல் வாதத்தாலும் சமணர்களை வென்றார்.

பாண்டிய மன்னனையும், பாண்டி நாட்டு மக்களையும் சைவம் தழுவச்செய்தார். பாண்டி நாட்டில் உள்ள தலங்களைத் தரிசித்தார். சோழநாடு மீண்டார். பிறகு, பல தலங்களைத் தரிசித்து திருப்பூந்துருத்தி அடைந்தார். அப்பர் சுவாமிகள் இவரது சிவிகையைத் தாங்கியமையறிந்து உடனே கீழிறங்கி இருவரும் அளவளாவி இருந்தனர். திருஒத்தூரில் ஆண் பனைகளைப் பெண் பனைகளாக்கிக் காய்க்கச் செய்தார்.

